| | |
|---|---|
| அநயோ꞉ | இவ்விருவருக்குள் |
| அதிக꞉ | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| வ்ருத்தா꞉ | பெரியவர்கள் |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாம꞉ | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் இப்பொழுது பாஞ்சஜன்னியத்தை தரித்துக்கொண்டிருக்கின்றான், இன்னொருவன் அநேக பிரமகபாலங்களைத் தரித்துக்கொண்டிருக்கின்றான்; இவ்விருவரில் சிறந்தவனிவனென்று பெரியவராகிய நீங்கள் கூறினால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் பாஞ்சஜன்யத்தைத் தரித்திருக்கின்றானென்றது-ஹரியை, அது அப்பாஞ்சஜன்யத்தை யவ்வரி தரித்ததிருத்தலால்.

அதுவும் கழிந்த துவாபரயுகத்தின் கடைசியிலாதலால், இப்பொழுதுஎன்று சமீபகாலம் குறித்துரைக்கப்பட்டது. ஹரி தனது கண்ணவதாரத்தில் அவந்திநாட்டிலிருந்த சாந்தீபமுனிவனிடத்து வேதாகமாதிகலைகளைக் கற்றுணர்ந்து தங்குரவனை வணங்கி அடியேன் நும்மாட்டுக்கற்ற கல்விக்குத் தக்கணை யென்னையென்று கேட்டதற்கு அம்முனி தனது மனைவியுட னாலோசித்துக் கண்ண! எமக்கு நீயருளும் தக்கணை கடலாட்டி லிறந்த எம்மகனை அழைத் தெமக்கு கொடுத்தல் என்றனன். உடனே ஹரி கடற்கரையையடைந்து வருணனை யழை

த்து என் குரவன் மகனைக் கொன்றவன் யாவனென்று கேட்டனன். அதற்கவ்வருணன் யானறியேன்; இக்கடலுள் வாழும் பாஞ்சஜனுக விருக்கலாம் என்றனன். பின்னர் கண்ணன் கடலிலிருந்த பாஞ்சஜனைத் தேடிக்கண்டு அவனோடு போர்புரிந்து அவன் மார்பைப்பிளந்து அவன் வயிற்றுக்குளிருந்த பாஞ்சஜன்னியமென்னும் சங்கத்தையெடுத்து அண்டமதிர ஊதினன். உடனே எமன் குருமகனை அளித்தனன். அளித்தவனைக் குருவினிடங் கொடுத்துத் தன்னிடத்திற்குச் சென்றனன். இதனை—

" வஞ்சம்படைத்துமறிவெண்டிரைவேலையூடு
துஞ்சுந்திறல்வாளவுணன்றனைச்சூழ்ந்துபற்றி
நெஞ்சம்பிளந்துநிலவுக்கதிர்ச்சங்குகொண்டான்
கஞ்சங்கருக்குங்கருணைத்தடங்கண்ணன்மாதோ" என்று சுக பாகவதத்தும்,

" பரவையினெய்திப்பஞ்சசனனைச்செற்றகன்றபாரின்
மருதிறவுதைத்தகோமான்மற்றவன்வயிற்றைப்போழ்ந்தே
யிரவியினவிர்கொண்டோங்குபாஞ்சசன்னியத்தையேரார்
கரதலம்பற்றியண்டங்கலங்கிடவூதினனல்" என்று நாரத பாகவதத்தும் வருதலாலுணர்க.

ஒருவன் அநேக பிரமர்களுடைய மண்டையோடுகளைத் தரித்திருக்கின்றான் என்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறணிந்திருத்தலால்.

ஹரன் பிரமாதிகளிறக்கும் பிரளயங்களாகிய மஹா பிரளயங்களில் ஒவ்வொரு பிரமர்களையும் சுட்டெரித்து அவர்களின் மண்டையோடுகளைத் தரித்திருக்கின்றான். இதனை—

" ஒள்ளொளிப்பிரமசிரசினுங்கணையான்மகேச்சுரனுலப்பினுளமரும்
எள்ளருந்தேவர்தானவர்யாருமிறப்பவோர்கணத்தினிலெரித்துத்
தள்ளரும்பிரமர்தலையொடென்பணிந்துசங்கரிகண்டுகண்களிப்ப
வள்ளிலைச்சூலவேறிரித்தினிதினனந்தநடம்புரிந்திடுவோன்" என்று கூர்மபுராணத்தும்,

𑌶𑍍𑌰𑍁𑌹𑍂𑌵𑌿𑌷𑍍𑌣𑍁𑌕𑌵𑌾𑌮𑌾𑌪𑍃𑌜𑌯𑌕𑌿𑌂𑌕𑌿𑌣𑌿𑌕𑌾𑌙𑍍𑌘𑍍𑌰𑌿𑌕𑌃 என்று ஸ்காந்தபுராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

### தாத்பரியம்.

ஹரி பாஞ்சஜன்னியமென்னும் ஒரு சங்கத்தைத் தரித்திருக்கின்றான், ஹரன் அநேக பிரமகபாலங்களைத் தரித்திருக்கின்றானென்பதாம்.

### தாரதம்மியம்.

ஒரு பாஞ்சஜன்னியமென்னும் சங்கவோட்டினையுடைய ஹரியைவிட, அநேக பிரமர்களின் மண்டையோடுகளையுடைய ஹரன் சிறந்தவனேயாம்; ஆதலா லிவ்விஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கி பிரதானமான ஹரனை நாங்கள் அடைந்து ஆஸ்ரயிக்கின்றோம். (உ0)

𑌏𑌕𑍋𑌵𑍍𑌰𑌜𑍇𑌷𑍍𑌟𑍁𑌗𑌰𑍁𑌤𑍇𑌮𑍃𑌦𑍁𑌵𑍇𑌣𑍁𑌨𑌾𑌦𑌂<br>
𑌅𑌨𑍍𑌯𑍋𑌲𑌯𑍇𑌷𑍍𑌟𑍁𑌗𑌰𑍁𑌤𑍇𑌵𑌿𑌕𑌟𑌾𑌟𑍍𑌟𑌹𑌾𑌸𑌂।<br>
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌃<br>
𑌸𑌤𑍍𑌯𑌂𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁𑌤𑌮𑌿𑌮𑌂𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃॥

எகோவ்ருஜேஷ்டகுருதேமிருதுவேணுநாதமங்யோலயேஷ்டகுருதேவிகடாட்டஹாஸம் கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்தியம்ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாமஃ ॥

### மொழிபெயர்ப்பு.

குரங்கு மடிகொள் சுரபிபுறங் குடில்க டோறுஞ் சென்றெய்தி<br>
யிரங்கு தொனியூார் சீங்குழலை யிசைத்தா னொருவ னின்னொருவ<br>
னரங்கு மியலை யுலகுடைய வட்ட காசம் புரிகின்றா<br>
னிரங்கு மிபலிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ரகஃ | ஒருவன் |
| ரஜேஷு | மாட்டுக்கொட்டாய்களில்-தொழுவுகளில் |
| ்ருது | மிருதுவான |
| ்வணு | மூங்கிற்குழலாலாகிய |
| ாதம் | இசையை |
| தருதே | செய்கின்ருன், |
| அந்ய: | இன்னெருவன் |
| யேஷு | பிரளயகாலத்தில் |
| விகடாட்டஹாஸம் | பயங்கரமான அட்டகாசத்தை |
| தருதே | செய்கின்ருன்; |
| அநயோஃ | இவ்விருவருள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| ்காவா | யாவன்? |
| இதி | இதனை |
| ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்ருேம். |

## பொழிப்பு.

ஒருவன் மாட்டுக்கொட்டில்களில் மெல்லிய வேய்ங்குழலிசையைச் செய்கின்ருன், மற்றொருவன் சங்காரகாலத்தில் அட்டகாசம் செய்கின்ருன்; இவ்விருவர்களில் சிறந்தவன் இவனென்று விவேகிகளாகிய நீங்கள் கூறுவீர்களானல், நாங்க ளந்த மஹாபுருஷனைச் சரணமாக அடைகின்ருேம்.

## விதப்பு.

ஒருவன் மாட்டுகொட்டிலி லிசையூதுகின்றானென்றது-ஹரியை, அது ஹரி அவ்வாறு இசையூதினமையால். இது இவ்வரி ஆயர்சேரியில் வளர்ந்த அந்நாளிற் செய்ததாம். இதனை—

''நாவலம்பெரியதீவினில்வாழுநங்கைமீர்களிதோரற்புதங்கேளீர்
தூவலம்புரியுடையதிருமால்தூயவாயிற்குழலோசையின்வழியே
கோவலர்சிறுமியரிளங்கொங்கைகுதுகுலிப்பவுடலுளவிழந்தெங்கும்
காவலுங்கடந்துகயிறுமாலையாகிவந்துகவிழ்ந்துநின்றனரோ'' என்று நாலாயிரப்பிரபந்தத்தும்,

"தெறித்தகன்றுவாய்வைத்தவம்முலையுணுதிரண்டு
கறித்தபுல்லுணுகறவைபூங்கற்பகச்செங்கேழ்
முறிக்கொழுங்கவின்கவற்றியமுகிணைகைச்செவ்வாய்
மறைக்கொழுந்தின்வேயின்னிசையஞ்செவிமடுத்தே' என்று சுகபாகவதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் விகடாட்டகாசஞ் செய்கின்றானென்றது-ஹரனை, அது ஹரன் பிரளயகாலத்தி லவ்வண்ண மட்டகாசஞ்செய்தலால். இதனை,

"சாருமெவ்வுயிருந்தன்வயமாக்கித்தளர்க்குமாணவப்பகையோருஞ், சூரனைமுதலாந்துளக்கரும்வகையும்துலங்குமிப்பிரணவப்பொருளாம், வீரனிலின்றேவிளிந்ததென்றுளத்துவிளைந்தெழும்வீரத்தின் குறிப்பி, ஞரமர்முடியோனுர்த்தலினுயதவ்விடம்வீரட்டகாசம்'' என்று தணிகைப்புராணத்தும்,

அரன் மஹாப்பிரளயகாலத்தில் சகலாண்டங்களையும் ஒரே கவளமாக விழுங்கு மியல்பினனாய், சகலாண்டங்களையும் அண்டங்களினுள்ளிற்பொருந்திய வேறுவேறான வுலகங்களையும் உலகங்களைப்படைத்துக்காக்கு ம் ஹயன்-ஹரி முதலானவர்களையும் ஹுங்காரம் அட்டகாசம் நோக்கமுதலியவற்றா லழித்துக் கடைசியி லட்டகாசத்துடன் நின்று நடனமிடுவென். இதனை—

ஸாட்டஹாஸவொநஜ்தஉநெடநவகாஸஹி என்று ஸ்ரீமஹாஸ்காந்தபுராணத்தும்,

“ அண்டத்தினுறுந்தோற்றமனைத்துந்தன்னிடத்தடங்கக்
கண்டத்தின்பெருமையினுற்கருத்திலுயிர்களிப்போங்கிப்
பண்டைப்போலுலகளிப்பப்பண்புறுதன்றிருவுளத்திற்
கொண்டக்கால்வீரட்டகாசஞ்செய்குணத்தவனுய்'' என்று திரு
வோத்தூர்ப்புராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பரியம்.

ஹரி வேணுகானஞ் செய்தான், ஹரன் விகடாட்டஹாஸம் செ
ய்தான் என்பதாம்.

## தாரதம்மியம்.

மெல்லிய வேய்ங்குழலூதுமவனிலும் அவ்வேய்ங்குழலிசைப்ப
வனையும், அவன் சம்பந்தமான வுலகங்களையும் அட்டகாசத்தினுலே
சங்கரித்தவன் சிறந்தவனுவென்று ஆலோசிக்கவேண்டுவதில்லையன்
ரே? ஆதலால் இவ்விஷயத்தி லிசையடையாத ஹரியை அப்பிரதா
னப்பொருளாக வகற்றி, இவ்விஷயத்திற் சிறந்த ஹரனை நாங்கள்
நியாயமுகத்தாற் சிறந்தவனுகக்கருதி, அந்த மஹாபுருஷனைச் சரண
மாக வடைகின்ரேம். (உக)

𑌪𑌕𑍍𑌷𑍀𑌨𑍍𑌦𑍍𑌰𑌵𑌾𑌹𑌨 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑍋𑌯𑌮𑍇𑌕𑌃
𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑍋 𑌮𑌹𑍋𑌕𑍍𑌷𑌵𑌰𑌵𑌾𑌹𑌨 𑌇𑌤𑍍𑌯𑌭𑌿𑌖𑍍𑌯𑌃।
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌃
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁 𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃॥

பக்ஷீந்த்ரவாஹநஇதிப்ரதிதோயமேகஸ்த்வந்யோமஹோக்ஷவர
வாஹநஇத்யபிக்ய:।கோவாநயோரதிகஇதயநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்ய
ம்ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாம:॥

## மொழிபெயர்ப்பு.

மன்னுஞ் சுவண விறகுடனே மருவும் வைந தேயனையே
துன்னு மூர்த்தி யாக்கொண்டு சுடர்ந்தா னொருவன் துகளில்லா
வன்ன விடபந் தனையூர்ந்து வருவா னொருவன் வையத்தி
லின்னர் தம்மிற் சிறந்தவன்பா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே

## பதப்பொருள்.

| | |
|---|---|
| அயம் | இந்த |
| ஏகஃ | ஒருவன் |
| பக்ஷீந்திர: | கருடனை |
| வாஹந: | வாஹனமாகவுடையவன் |
| இதி | என்று |
| ப்ரதித: | பிரசித்தியடைந்தவன், |
| அந்யஃது | இன்னொருவனுல் |
| மஹோக்ஷவரவாஹந: | சிறந்ததும் சிரேஷ்டமானதுமான வ்ருஷபத்தை வாஹனமாகவுடையவன் |
| இதி | என்று |
| அபிக்ய | பிரக்கியாதியடைந்தவன்; |
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | அதிகமானவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் கருடனை வாகனமாகவுடையவனென்று கீர்த்திபெற்றவன், இன்னொருவன் சிறந்ததும் உயர்ந்ததுமான இடபத்தை வாகனமாகவுடையவன்; இவரில் சிறந்தவனைப் பெரியவர்களான நீங்கள் கூறினுல், நாங்கள் உங்களால் சிறந்தவனென்று கூறப்பட்ட மகாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் பக்ஷீந்திரவாகனன் என்றது - ஹரியை, அது அவ்வரி ருடனை வாகனமாகக் கொண்டிருந்தமையால். இதனை—

காசிபன் என்னும் முனியின் மனைவியர் பலரில் ஒருத்தியான நுதையென்பவள் பெற்ற மகனான கருடன் திருமாலோடு போர்புரி து திருமாலால் வெல்லப்படாது போனபோழ்து, கபடமாகக் கருட னப்பார்த்து உனக்கு வேண்டிய வரங்களைக்கேள் தருகின்றேனென் கூறியதனைக் கேட்ட கருடன் கலுக்கென்று நகைத்து நாராயணா என்னை வெல்லாமலே எனக்கு வரமளிக்கவந்தாய் இதுமொரு வே க்கைதான் என்று கூறி உனக்கு வேண்டுமொன்று லென்னைக்கேள் வர தருகின்றேன் என்றனன். உடனே ஹரி கருடனைப்பார்த்து நீ என கு வாகனமாக இருக்கவேண்டுமென்று வரங் கேட்டனன். அதற் வன் சம்மதித்தனன். அதனு லரிக்குக் கருடன் வாகனமாயினன். தன் விரிவை புராணேதிகாசாதிகளி லுணர்க.

"கருமுகிருமணைக்காடுபூத்துநீ
டிருசுடரிருபுறத்தேந்தியேடவிழ்
திருவொடும்பொலியவோர்செம்பொற்குன்றின்மேல்
வருவபோற்கலுழன்மேல்வந்துதோன்றினுன்" என்னுங் கம்ப ராமாயணத்தாலும்,

"விட்டிலன்றுருவன்மூச்சுவிழுத்தவம்புரிதலானே
முட்டியதுமக்குமாங்கேமூச்சுநாங்காத்துமென்று
மட்டறுவேதமேனிவரிச்சிறைப்புள்ளின்மேற்றிக்
கெட்டுநல்லுருவக்காந்தியெறிதரவேகினுனல்" என்னும் பா வதத்தாலும்,

"குழல்கோவலர்மடப்பாவையும்மண்மகளும்திருவும்
நிழல்போல்வனர்கண்டுநிற்குங்கொல்மீளுங்கொல்தண்ணந்துழாய்
அழல்போலடுஞ்சக்கரதண்ணல்விண்ணோர்தொழக்கடவுந்
தழல்போற்சினத்தவப்புள்ளின்பின்போனதனிநெஞ்சமே" என்று

நம்மாழ்வார் கூறிய இயற்பாவிலும் கேட்கப்படுதலாலும், மற்றும் பல விடங்களிலும் ஹரி கருடவாகனன் என்றிருத்தலாலும்,

நிகண்டிலும் நாமாஙகொவிஷ்ணு... என்று கேட்கப்படுதலாலும் ஹரி கருடவாகனன் என்றறியப்படுகின்றான்.

ஒருவன் சிறந்ததும் பெரியதுமான இடபத்தை வாகனமாகவுடையவன் என்றது - அரனை, அது அவ்வரன் எருதை வாகனமாகக் கொண்டிருத்தலால்.

முன்னொருகாலத்தில் ஹரி ஸ்ரீகைலாசத்திலிருக்கும் ஹரனிடம் தனது கருடவாகனத்திலேறி ஹரனுடைய ஆலயத்தின் முன்புறத்தில் ஹரனுடைய வாகனமாகிய எருது கிடக்கும் இடத்தில் தனது வாகனமான கருடனையும் நிறுத்தி உள்ளே சென்றனன். கருடன் இடபத்தி னருகில் இறுமாந்திருந்தனன். பின்னர் சற்றுநேரத்திற்கெல்லாம் அவ்விடபம்விட்ட மூச்சினுட் சிக்கித் தடுமாறி இடபத்தின் மூக்கினுட் போவதும் வெளிவருவதும் ஆகிப் பெருங்காற்றிற் சிக்கிய எருக்கம் பஞ்சைப்போல படாதபாடுபட்டான். பின்னர் சிவகணங்களால் எழுப்பப்பட்ட எருதின் சுவாசம் நின்றவுடனே ஒருவாறு சுகமடைந்து ஹரியுடன் திரும்பிச் சென்றான் என்று ஒரு நகைப்புக்கேற்ற இரதமமைந்தசரித்திரமொன்று பலநூல்களிலுங்கேட்கப்படுகின்றது. இதனால் கருடவாகனத்தின் உயர்வும் இடபவாகனத்தி னுயர்வும் நன்கு புலப்படும். இதனைச் சுட்டியே ஆசிரியரும் 'மஹோக்ஷவரவாஹநம்' என்றார். இதனை,—

"கொடுவினையாவொன்றுங்குறுகாவடி
குறைந்தடைந்தாராழாமைக்காக்கும்படி
படுமுழவம்பாணிபயிற்றும்படி
பதைத்தெழுந்தவெங்கூற்றைக்காய்ந்தவடி
கடுமூரேணூர்ந்தான்கழற்சேவடி
கடல்வையங்காப்பான்கருதும்மடி

நெடுமதியங்கண்ணியணிந்தானடி
நிறைகெடிலவீரட்டநீங்காவடி'' என்று திரவிடசுருதியிலும்,

" அந்நிலையிற்றிருத்தோணிவீற்றிருந்தாரருளுக்கான்
முன்னிலைமைத்திருத்தொண்டுமுன்னியவர்க்கருள்புரிவான்
பொன்மலைவல்லியுந்தாமும்பொருவிடைமேலெழுந்தருளிச்
சென்னியிளம்பிறைதிகழச்செழும்பொய்கைமருங்கணைந்தார் " என்று பெரியபுராணத்தும் வருதலைக்கொண்டும், மற்றையவிடங்களில் வருவனவற்றைக்கொண்டும் உணர்க.

## தாத்பரியம்.

ஹரி கருடவாகனன், ஹரன் இடபவாகனன் என்பதாம்.

## தாரதம்மியம்.

வாகனத்தையே வரங்கேட்டுப்பெற்று அதனில் ஏறுபவனும், அவ்வாகனந் தன்னிடத்துக்கொண்டுள்ள அகம்அறுமாறு மூச்சுவிட்டுக் கருவபங்கஞ்செய்யும் பிறனுடைய வாகனத்தின் சிறப்பும் இவ்வண்ணமானது என்று கூறுமலே நன்கு விளங்கும். அன்றியும் ஹரனுடைய வாகனம் தருமத்தெய்வம், அதன் வேண்டுகோடலினலதனை அவ்வரன் வாகனமாகக்கொண்டான். இவ்விஷயத்தில் கருடவாகனம் இடபவாகனத்தைவிட அனேகங்கோடிப்பங்கு தாழ்ந்தது என்பது முன்காட்டிய கதையே விளக்கும். தாழ்ந்த கருடனை வாகனமாகக் கொண்ட ஹரியை இவ்விஷயத்திலப்பிரதான்மாக நீக்கி, உயர்ந்த ஹரனை நாங்கள் சரணமாக அடைந்து வணங்குகின்றோம். (உஉ)

[illegible]

எகஸ்துயோநிஜஇதிப்ரஸித்திமங்யஸ்துஜாதஇதிஸர்வஜகத்ப்ரஸிரத்திம்| கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்துதமிமம்வயமாஸ்ரயாமः||

## மொழிபெயர்ப்பு.

வள்ளங் குலவு கடல்புடைசூழ் வையத் துற்ற வுயிர்களைப்போற்
கொள்ளும் யோனி சன்மனென்னக் குலவு மொருவன் கூடுறொருவன்
துள்ளும் பிறவி யில்லாதத் தூயோ னாகித் துலங்கினான்
எள்ளி லிவரிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| எகஸ்து | ஒருவனானல் |
| யோநிஜ꞉ | யோனியிற்பிறப்பவன் |
| இதி | என்று |
| ப்ரஸித்திம் | பிரக்யாதியை |
| வ்ரஜதி | அடைகிறான், |
| அந்ய꞉ து | இன்னொருவனோவென்றால் |
| அஜாத | பிறப்பில்லாதவன் |
| இதி | என்று |
| ஸர்வஜகத்பிரஸித்திம் | எல்லா வுலகங்களிலும் பிரஸித்தியை |
| வ்ரஜதி | அடைகிறான்; |
| அநயோ꞉ | இவர்களுக்குள் |
| அதிக꞉ | சிறந்தவன் |
| கோவா | எவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா꞉ | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். சொன்னால் |
| தமிமம் | அந்த விவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஸ்ரயாம꞉ | ஆஸ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் என்றும் யோனியில் பிறப்பவனாகக் கீர்த்தியடைகின்றான், இன்னொருவன் யோனியில் பிறவாதவனென்று கீர்த்தியடைகி

ன்ருன்; இவ்விருவரில் சிறந்தவனை அறிவுடையவர்கள் சத்தியமாகச் சொன்னல் நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகவடைகின்ருேம்.

விதப்பு.

ஒருவன் யோனியிற்பிறப்பவனென்றது - ஹரியை, அது ஹரி யோனிவாய்ப்பாட்டுப் பிறத்தலால்.

அதாவது கோசலையின் யோனியில் பிறந்தவ னிராமன், தேவகியின் யோனியில் பிறந்தவன் கிருஷ்ணன், ரேணுகையின் யோனியிற்பிறந்தவன் பரசுராமன், அநசூயையின் யோனியிற் பிறந்தவன் கபிலன் என்று ஹரியின் பிறப்புரைக்கும் புராணவேதாதிகளாலறிக. இதனை—

"மண்மிசையோநிகள்தோறும்பிறந்தெங்கள்மாதவனே
கண்ணுறநிற்கிலுங்காணகில்லாவுலகோர்களெல்லாம்
அண்ணலிராமாநுசன்வந்துதோன்றியவப்பொழுதே
நண்ணருஞானந்தலைக்கொண்டுநாரணற்காயினரே. என்றும்,
வண்ணமாடங்கள்சூழ்திருக்கோட்டியூர்
கண்ணன்கேசவன்நம்பிபிறந்தநாள்
எண்ணெய்சுண்ணமெதிரெதிர்தூவிட [த்தும்,
கண்ணன்முற்றங்கலந்தளருயிற்றே" என்றும் நாலாயிரப்பிரபந்த
"ஒருபகலுலகெலாமுதரத்துட்பொதிந்
தருமறைக்குணர்தருமவனையஞ்சனக்
கருமுகிற்கொழுந்தெழில்காட்டுஞ்சோதியைத்
திருவுறப்பயந்தனடிறங்கொள்கோசலை" என்று இராமாயணத்தும்,

ஜயது ஜயது தேவோ தேவகீநந்தநோயம்
ஜயது ஜயது க்ருஷ்ணோ வ்ருஷ்ணிவம்ஶப்ரதீப:
ஜயது ஜயது மேகஶ்யாமள: கோமளாங்கோ
ஜயது ஜயது ப்ருத்வீபாரநாஶோ முகுந்த: ॥ என்று

முகுந்தமாலையிலும் கேட்கப்படுதலாலுணர்க.

ஒருவன் யோனிவாய்ப்பட்டுப் பிறவாதவனென்றது - ஹரனே, அது ஹரன் யோனிவாய்ப்பட்டு பிறவாமையால். இதனை—

ஐஷம்வாசுஜெ ஜெவெகிஷிஷாஸீக - வஜெவஜெலௌகூ ஜுகூறுகூஸீக ஷகுஜெவாதிதீயம - ஷவாஷஷகூஷாமூஜ ஞூ தாஜஜொகூஜொகூஐஜூதாவயம் என்று சுருதியிலும்,

"வைச்சபொருணமக்காகுமென்றெண்ணிநமச்சிவாய
வச்சமொழிந்தேனணிதில்லையம்பலத்தாடுகின்ற
பிச்சன்பிறப்பிலிபேர்நந்தியுந்தியின்மேலசைத்த
கச்சினழகுகண்டாற்பின்னைக்கண்கொண்டுகொண்டதென்னே"

என்று திரவிடசுருதியிலும்,

"எல்லார்பிறப்புமியற்பாவலர்தஞ்
சொல்லாற்றெளிந்தேநஞ்சோணேச - னில்லிற்
பிறந்தகதையுங்கேளேம்பேருலகில்வாழ்ந்துண்
டிறந்தகதையுங்கேட்டிலேம்" என்று குகநமசிவாயயோகி வெண்பாவிலும் கேட்கப்படுதலைக்கொண்டும் உணர்க.

### தாத்பரியம்.

ஹரி யோனிவாயில் பிறப்பவன், ஹரன் யோனிவாயில் பிறவாதவன் என்பதாம்.

### தாரதம்மியம்.

இவ்வுலகத்திற் பலதரம் நிலைமாறி வருபவனைவிட ஒரேரீதியாக இருப்பவனைச் சிறப்பாக மதிக்கின்றார்கள். ஹரி பலமாதர்களின் யோனிசம்பந்தமாகப் பிறந்திருத்தல் பாகவதமுதலிய மஹா நூல்களிலும், அவ்வரியினன்பர்வாக்கியங்களிலும் கேட்கப்படுதலால், ஹரி பிறப்புள்ளவனென்று பிரசித்திபெற்றவன். ஹரனே நிலைமாறாததன்மையனாகி மிருத்துஞ்சயனென்று யதார்த்தநாமமடைந்து சுருதியாதிகளாலும், அன்பர் வாக்கியங்களாலும் பிறவியற்றவனென்று பிரசித்தியடைந்திருக்கின்றனன். இவ்விஷயத்தி லிவ்விருவர்களில் ஹரன் உயர்ந்தவனும் ஹரி தாழ்ந்தவனும் என்று ஸ்பஷ்டமாக விளங்குத

லால், நாங்கள் பிறப்பினுல் தாழ்வடைந்த ஹரியை, பிறப்பில்லாதவனுகிய ஹரனைவிட தாழ்ந்தவனென்றறிந்து அப்பிரதானமாக அகற்றி இவ்விஷயத்திற்சிறப்படைந்த ஹரனை அடைந்து வணங்குகின்ரேம்.

𑌏𑌕𑍋𑌹𑍍𑌯𑍁𑌲𑍂𑌖𑌲𑌨𑌿𑌬𑌦𑍍𑌧𑌇𑌤𑌿𑌪𑍍𑌰𑌥𑌿𑌤𑌿𑌂𑌹𑌿
𑌸𑍍𑌤𑍍𑌵𑌨𑍍𑌯𑍋𑌬𑌭𑍂𑌵𑌭𑌵𑌪𑌾𑌶𑌵𑌿𑌮𑍁𑌕𑍍𑌤𑌿𑌦𑌕𑍍𑌷𑌃।
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑍃𑌦𑍍𑌧𑌾
𑌸𑍍𑌤𑍍𑌯𑌂𑌧𑍍𑌰𑍁𑌵𑌂𑌤𑌮𑌿𑌮𑌂𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃॥

ஏகோஹ்யுலூகலநிபத்தஇதிப்ரவித்தி ஸ்த்வந்யோபபூவபவபாசவிமுக்திதக்ஷாः। கோவாநயோ ரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம் ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாமः॥

## மொழிபெயர்ப்பு.

அறையுங் கடனீர் வைப்பினிடை யறைவா ரொருவ னுயர்குடிற்
கறையிற் கட்டுண் டானென்னக் கருது மொருவன் கருவினிடை
உறையும் பந்த வியல்பதனை யொழிப்பா னுகி யொளிர்கின்ருன்
இறைவ னிவரி லிவனென்ன விசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகः | ஒருவன் |
| உலூகலநிபத்தः | உரலில் கட்டிப்போடப்பட்டவன் |
| இதி | என்று |
| ப்ரவித்திம்ஹி | ப்ரவித்தி யடைந்தானல்லவா, |
| அந்யःது | இன்னெருவனுல் |
| பவபாசவிமுக்திதக்ஷः | ஸம்ஸாரபந்தத்தை விடுவிக்கிறதில் சமர்த்தனுனவனுக |
| பபூவ | ஆனுன் |
| விபாதி | ப்ரகாசிக்கின்ருன்; |
| அநயோः | இவ்விருவருக்குள் |
| அதிகः | சிறந்தவன் |

| | |
|---|---|
| கோவா | எவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | உங்களா லுயர்ந்தவனென்று கூறப்படுகிற அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் உரலிற் கட்டப்பட்டவனென்று பிரசித்தி யடைந்தவனல்லவா, இன்னொருவன் சமுசாரபந்தத்தை விடுவிக்கிறவனாக ஆனான்; இவ்விருவருக்குள் சிறந்தவனென் றுள்ளவனை இவனென்று அறிவுடைய நீங்கள் கூறுவீர்களானால், நாங்கள் அந்த மகாபுருஷனைச் சரணமாக அடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் உரலில் கட்டப்பட்டானென்றது-ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணங் கட்டுண்டமையால்.

ஹரி கண்ணனாகப்பிறந்து இடையர் குடிவில் வளர்ந்த வஞ்ஞான்று ஒருதினம் தனது மாதாவான அசோதையின் மடியிலிருந்து பாலுண்டனன். அப்பொழுது சமையற்கொட்டிலிற் பாற்றாழி பொங்கிப் பால் நெருப்பில் விழுந்த நாற்றமறிந்து அசோதை பால்கொடுப்பதைவிட்டுப் பானெருப்பை யவிக்கச்சென்றனள். உடனே தனக்குப் பால்கொடாமற் சென்றன ளென்னையென் னுங் கோபத்தா லெதிரிற் கடைதற்கு வைத்திருந்த தயிர்த்தாழியைக் காலாலுருட்டி யுடைத்துவிட்டு, வேறொரு குடிலுள் நுழைந்து அங்கொரு கல்லுரலைக் கவிழ்த்து அதன்மீதேறி யுயரத் தொங்கிக்கொண்டிருந்த உறியிலிருந்த கலசத்தைப் பொத்தலாக்கி அதனிலிருந்த வெண்ணெயை யெடு

ந்து இரண்டு கைகளிலும் வைத்துத் தின்றுகொண்டங்கிருந்து, பூனை களுக்குங் கொடுத்தனன். இதற்குள் பாலடுப்பின் நெருப்பை அளவு படுத்தித் திரும்பிய யசோதை தயிர்த்தாழி யுடைந்திருத்தலைக்கண்டு இது கண்ணன்செய்த வேலையேயன்றி வேறில்லையென்று கருதித் தேடி யறைக்குள் நிற்பவனது சிறு குறும்பைக்கண்டு கோபங்கொ ண்டு, உன்னைத் திருடனென்று அயற்குடில்களிலுள்ள இடைச்சிகள் கூறியதை மெய்யல்லவென்று கருதினேன்; நீ திருடனென்பதை இன்று அறிந்தேன்; இனி யுன்னை விடமாட்டேன்; திருட்டுச்சிறுவா, இங்குவா இங்குவா என்று துரத்திப்பிடித்து ஒரு உரலினைக்கவிழ்த்த தன் நடுவிற்கும் இவனிடுப்பிற்குமாக ஒரு தாம்பினை இட்டுக்கட்டி உரலோடு நகருமாறு வைத்தனள். இதனை—

"அரிவையர்கள்மிகநகைக்கயசோதைநங்கை
யாயர்மனைத்தாம்பெல்லாமுடிந்தொன்றாக்கிக்
கரியவனைக்கட்டுதலும்போதாதாகிக்
கைசலித்துமெய்வெயர்வுசொரியக்கண்டு
வரையினமர்யோகிகட்குமறைநாலுக்கும்
வானவர்க்கும்வாசவர்க்குமலரின்வந்த
பிரமனுக்குமகப்படாப்பெரியோனாய்கைத்
தாம்பினாலுலூகலத்திற்பிணிப்புண்டானால்" என்று பாகவ

தத்தில் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் சமுசாரபந்தத்தை நிவிர்த்திப்பதில் பிரசித்தியடைந்த வனென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வண்ண மநேகர்களின் சமுசாரபந்தத்தை நிவிர்த்தித்தமையால்.

ஸ்ரீகைலாசத்திலே வடவாலநிழலிலே ஞானசாரியனாக வீற்றி ருந்து ஜனகன் முதலிய வனேகர்களின் பந்தங்களை நிவிர்த்தித்த பர மாசாரியனென்றும், இன்னும் பந்தநிவர்த்தியையடைய விரும்பின பக்குவர்களனைவரும் அவ்வரனையே சரணமாக வடையவேண்டுமென் றும் வேதாகமாதி நூல்கள் கோஷிக்கின்றன. இதனை—

[illegible]

ஸகாமோயஜிஷாநீமஸஉவஹூிதா॥ என்று எஜுர்வேத சம்பந்தமான சுகரகஸ்யோபநிஷதம் பிரதிபாதித்தலாலும்,

"கடுவினைப்பாசக்கடல்கடந்தைவர்கள்ளமை மெள்ளவேதுரந்து, னடியிணையிரண்டுமெடையுமாறடைந்தே னருள்செய்வா யருள்செயா தொழிவாய், நெடுநிலமாடத்திரவிருள்கிழிக்‌நிலவிளக்கலகில்சாலேகம்,புடைகிடந்திலங்குமாவணவீதிப்பூவணங்கோயில்கொண்டாயே" என்று திருவிசைப்பாவிலும், மற்றிடங்களிலும் வருதலைக்கொண்டுணர்க.

### தாத்பரியம்.

ஹரி உரலிற் கட்டுண்டான், ஹரன் ஆன்மகோடிகளின் பந்தங்களை அவிழ்க்கின்ருன் என்பதாம்.

### தாரதம்மியம்.

பாசபந்த முடையவனைவிடத் தானும் பாசபந்தமின்றிப் பிறர்க்கும் பாசபந்தமொழிப்பவன் மிகவுஞ் சிறந்தவனென்பது சொல்லாமே யமைந்தவிஷயம். இதனல் பாசபந்தத்தாற்ருழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாகத்தள்ளி இவ்விஷயத்தி லுயர்வடைந்த மஹாபுருஷனாகிய ஹரனை நாங்கள் சரணமாக அடைந்து வணங்குகின்ருேம். ()

ஏகஸ்த்வநித்யோஸப்ரதிதோஜகத்யாமந்யஸ்துநித்யஇதிசஶ்ருதிலோகவித்தி:।
கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்
ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாம:॥

ஏகஸ்த்வநித்யோஸப்ரதிதோஜகத்யாமந்யஸ்துநித்யஇதிசஶ்ருதிலோகவித்தி:। கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம் ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாம:॥

### மொழிபெயர்ப்பு.

தண்ணங் கமல வனம்புடைசூழ் தரணி தன்னி லனித்தியனு
நண்ணு மொருவன் மற்ருெருவன் நடலை யில்லா நித்தியனு
மண்ணும் வேதா கமங்களுமே மாரு துணைக்கு மாண்புற்ருன்
எண்ணு மிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஸ்து | ஒருவனுல் |
| அநித்யஃ | அநித்தியன் |
| இதி | என்று |
| ஜகத்யாம் | லோகத்திலே |
| ஸுப்ரதித | நன்ருகப் பிரசித்தி அடைந்தவன், |
| அந்யஸ்து | இன்னொருவனேவென்ருல் |
| நித்யஃ | நித்தியன் |
| இதி | என்று |
| ஶ்ருதிச | சுருதிகளிலும் |
| லோகச | லோகத்திலும் |
| ப்ரஸித்தி | கீர்த்தி |
| அஸ்தி | இருக்கின்றது; |
| அந்யோஃ | இவ்விருவருக்குள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| கோவா | எவன் ? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த விவனே |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்ருேம். |

## பொழிப்பு.

ஒருவன் அநித்தியனென்று லோகத்திலே நன்ருகப் பிரஸித்தி யடைந்தவன், மற்ருெருவன் நித்தியன் என்று நன்ருகப் பிரஸித்திய டைந்தவன்; இவ்விருவருள் சிறந்தவனே அறிவுடைய நீங்கள் சொன் ஞல் நாங்களந்த மகாபுருஷனேச் சரணமாக அடைகின்ருேம்.

## விதப்பு.

ஒருவன் அநித்தியனென்றது-ஹரியை, அது அவ்வரி அநித்திய த்துவத்தை யடைதலால்.

ஹரி இராமன் கிருஷ்ணன்முதலிய அவதாரங்களை அடைந்திருந்து இறந்தனன் என்று கேட்கப்படுதலால், அநித்தியன் ஆயினான்; நிலையற்றவனையன்றே அநித்தியனென்று கூறுவது நூல்.

ஹரி கிருஷ்ணாவதாரமடைந்து துவாரகையிலிருந்து கடைசியில் சரமனென்னும் வேடனொருவன் விட்ட அம்பினால் கிருஷ்ணரூபத்தினின்றும் அநித்தியமடைந்தானென்றும், இறந்த கண்ணனுடைய சரீரத்தைப் பார்த்தன்முதலியவர்கள் தீயிலிட்டுச் சுட்டனரென்றும், அவனுடன் அவன் மனைவியரான உருக்குமணியாதியர் உடன்கட்டையேறினர்களென்றுங் கேட்கப்படுதலாலும், இராமனாகப் பிறந்த ஞான்று சரீரத்தை சரயுநதி நீரில் மூழ்கவிட் டவ்வுடலினின்றும் அநித்தியமடைந்தானென்றுங் கேட்கப்படுதலாலும், ஹரி அநித்தியமானவனென்று அறியப்படுகின்றான். இதனை—

"மேதகுபுகழுடைவிதர்ப்பன்பாவையே
ஆதிநன்மடந்தையரழலின்மூழ்கமற்
றேதமின்மடந்தையர்யாருமீறிலா
நாதன்மெய்யொடுதழனண்ணினாரரோ" என்று பாகவதத்தும்,

"துன்னியவானவர்துயரநீக்குவான்
மன்னியவுலகினிற்பிறந்தமாயையைத்
தன்னிகரிலாதவச்சரயுநீத்துத்தன்
பின்னவர்தம்முடன்பெயர்த்துமேவினான்" என்று இராமாயணத்தி விராமன் தன்னுடம்பைச் சரயுவிலமிழ்த்தி வேறுடம்படைந்தானென்றும் கேட்கப்படுதலாலும், ஹரி அநித்திய இயல்பினனென்றறியப்படுகின்றான்.

ஒருவன் நித்தியனாகவிருக்கின்றான் என்றது-ஹரனை, அது அவ்வரன் அச்சுமாறாநிருத்தலால். மிருத்துஞ்சயன் என்று ஹரன் பெயரடைந்திருத்தலும் அழியாமையினாலன்றே. இதனை—

" இந்திரியவயமயங்கியிறப்பதற்கேகாரணமா
யந்தரமேவீழ்ந்துபோயருநரகில்வீழ்வேற்குச்
சிந்தைதனைத்தெளிவித்துச்சிவமாக்கியெனையாண்ட
வந்தமிலாவானந்தமணிகொடில்லைகண்டேனே" என்று தமிழ்
வதத்தும்,

[illegible]
ன்று மைத்திரேயோபநிஷத்திலும்,

" அத்தனும்பகவன்ருனுமருவமுமுருவுமாகுஞ்
சுத்தனுமுணர்தற்கொண்ணுச்சோதியுமியாண்டுமேவுஞ்
சித்தனுமநாதிதானுந்தேவர்கடேவுமென்று
நித்தனுமுயிர்க்குணீங்காநிருத்தனுமவனேயென்னும்" என்று கந்
புராணத்திலும் வருதலைக்கொண்டுணர்க.

## தாத்பர்யம்.

ஹரி அநித்தியன், ஹரன் நித்தியன் என்பதாம்.

## தாரதம்மியம்.

' அழியுமியல்பினை யுடையவனைக்காட்டிலும் அழியாவியல்பினை
டையவன் சிறந்தவனென்பது லோகப்பிரஸித்தம். ஆதலால் நாங்க
ம் அநித்தியமான இயல்பினையுடைய ஹரியைவிட நித்தியமான
யல்பினையுடைய ஹரனைச் சிறந்தவனுக அறிந்து அநித்தியமான
ரியைஅப்பிரதானமாக இவ்விஷயத்திலொதுக்கி நித்தியமான இய
பினையுடைய ஹரனை பிரதானமாக நியாயமுகத்தாற்கொண்டு வண
குகின்ருேம். (உரு)

[illegible]
[illegible]
[illegible]
[illegible]

ஏகஸ்துபார்த்தரதவாஜிக்ருதோபசாரஸ்த்வந்யஸ்துபார்த்தஸமரப்ரணுதப்ரபாவஃ|கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாமஃ॥

## மொழிபெயர்ப்பு.

குந்தி மகாரிற் பார்த்தன்றேர்க் குதிரைக் குபசா ரகனுகி
யிந்த வுலகி லுறுமொருவ னின்ன மொருவ னிவ்விசையன்
பந்த வமரிற் றுதிபுரியும் பான்மை யுடையா னின்னவரில் [மே.
எந்த வியல்போன் சிறந்தவனென் றிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுது

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஸ்து | ஒருவனுனல் |
| பார்த்தரதவாஜி க்ருதோபசாரஃ | அருச்சுனன் றேரிற்கட்டப்பட்ட குதிரைகளின்பொருட்டு செய்யப்படுகின்ற உபசாரத்தினையுடையன், |
| அந்யஸ்து | இன்னெருவனுனல் |
| பார்த்தசமர ப்ரணுதப்ரபாவஃ | அருச்சுனனேடே யுத்தத்திலவனுல் துதிக்கப்பட்ட மஹாத்மியமுடையவன் ; |
| அநயோஃ | இவ்விருவருக்குள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| கோவா | எவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்ருேம். |

## பொழிப்பு.

ஒருவன் அருச்சுனன் றேர்க்குதிரைகளுக் குபசாரம் செய்யுமவனுக வுள்ளவன், இன்னெருவன் அந்த அருச்சுனனேடு செய்த யுத்த

த்தில் அந்த அருச்சுனனால் துதிக்கப்பட்ட பிரதாபமுடையவன்; இவர்க ளிருவரில் சிறந்தவன் இவனென்று பெரியவர்களே நீங்கள் சொல்லுவீர்களானால், நாங்கள் அந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

விதப்பு.

ஒருவன் பார்த்தனுடைய தேர்க்குதிரைகளை உபசரிப்பவனெ ன்று கூறியது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்திருத்தலால்.

பாரதயுத்த நடந்தகாலத்தி லருச்சுனனுக்குச் சாரதியாக இருந்து தேரோட்டின காலத்துக் குதிரையவிழ்த்து நீரூட்டல் முதலிய காரிய ங்களை ஹரி செய்தானென்று பாரதாதிகளாற் பிரஸித்தம். இதனை—

" தலமாமகளுந்திதடநிகரானதடங்கண்
வலமாறுகொளிருதோள்வலியுடைவள்ளலுமைப்பக்
குலமாமணியனையான்விழைதேர்நின்றெதிர்குதியா
வலமானதுரங்கங்களைவள்வார்விசிநெகிழா. என்றும்,

குவளைப்பரிமளமேவியகுளிர்வாரிபருக்கிப்
பவளத்துயர்வாயாரிருபாதங்கைவிளக்கித்
தவளக்கிரியொருநாலெனமேன்மேலொளிதருபே
ரிவுளிக்குமிளைப்பாறவிளைப்பாறினனிப்பால்" என்றும் ஸ்ரீமகா பாரதத்தில் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் பார்த்தனுடன் யுத்தஞ்செய்து அவனால் துதிக்கப்பெற் றவனென்றது-ஹரனை, அது அவ்வர னவ்வாறு துதிக்கப்பெற்றமை யால்.

ஹரன் பாசுபதாஸ்திரத்தின்பொருட்டுத் தவஞ்செய்து நின்ற வருச்சுனனுடன் பன்றியினிமித்தம் சண்டையிட்டுக் கடைசியி லவ் வருச்சுனனால் துதிக்கப்பெற்றான். இதனை—

கபர்தி௩ஸவகெூவெஶஹமெநத்ரநிவாதந। தெவ தெவஊஹாதெவநீலக்ரீவஜடாயர। காரணாநாஞ்வபரஊஂஜா நெ௯ஂதிரியஂபகஂவிஷ௲॥ என்று ஸ்ரீமஹாபாரதத்தில் கேட்க ப்படுதலாலும்,

" மல்லமர்தொடங்கியிவரிருவரும்வெகுண்டுபொரமாதிரமுமா நிலமுமே, வில்லையுமதிர்ந்துசுழல்கின்றபொழுதத்திமையவின்பமயில் கேள்வன்வெகுளா, நல்லசைபுனைந்தமணிநூபுரவிசாலவொளிநண்ணு பதநாண்மலரினுல், வில்லியரிலெண்ணுதிறல்வில்லுடையகாளைதனை விண்ணுலகில்வீசினனரோ. என்றும்,

ஆதியேயண்டமுமனைத்துமாயொளிர்
சோதியேகொன்றையந்தொங்கன்மௌலியாய்
வாதியேமரகதவல்லியாளொரு
பாதியேபவளமாம்பரமரூபியே. என்றும்,

பையராவணிமணிப்பவளமேனியாய்
செய்யவாய்மரகதச்செல்விபாகனே
மையனேசேவடியடைந்தவர்க்கெலா
மெய்யனேயெங்குமாய்விளங்குசோதியே." என்று அருச் சுனன் சண்டையிற் றுதித்தானென்று பாரதங் கூறுதலாலு முணர்க.

### தாத்பரியம்.

ஹரி பார்த்தன் றேர்க்குதிரைகளை யுபசரித்தவன், ஹரன் பார்த்தனல் துதிக்கப்பெற்றவனென்பதாம்.

### தாரதம்மியம்.

தன்னிலையைவிட்டுத் தேர்ப்பாக னுருவையடைந்து ஒருவனுடைய குதிரைகளை நிரூட்டன் முதலிய வுபசாரங்களினலே மகிழ்விப்பவனைவிட, ஒருவனேடு போர்புரிந்து மறுதலையாற் றுதிக்கப்பெற்றவன் சிறந்தவன். இம்முறையி லரி அருச்சுனுடைய சாரதியாக நின்று அவன் குதிரைகளை யுபசரித்தமையால் தாழ்ந்தவனுயினன், ஹரன் அந்தப்பார்த்தனுடன் சண்டைசெய்து அதேபார்த்தனற் புகழ்ப்பெற்றமையாற் சிறப்படைந்தான்; இதனல் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி உயர்வடைந்த ஹரனை நாங்கள் சரணமாக அடைந்து வணங்குகின்றேம். (உகூ)

வ்ராஹ்மாஸ்து விஷ்ணு மயிதீ ப்ரவத்தஜ் ஞாணகொடு
நெ ப்ராவிஷ்ணு வஷூஹஜதிவ்யயிதஷ்ரீமொக்ஷ்யாழ!

𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑍃𑌦𑍍𑌧𑌾
𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌂𑌧𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑌮𑌿𑌮𑌂𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃॥

வ்யாப்தஸ்சவிஷ்ணுரயமித்யவகம்யஏகோ அந்யோவிஷ்ணுவல்ல பஇதிப்ரதிதஸ்த்ரிலோக்யாம் । கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்துதமிமம்வயமாஸ்ரயாம:॥

## மொழிபெயர்ப்பு.

மண்டுந் தவள வளை தரள மணிக ளிறைக்கு மாநிலத்தில்
விண்டு வென்னும் பெயருடனே விளங்கு மொருவன் வேறொருவன்
அண்டு மன்னுன் வல்லவனென் றறையும் பேரொ டார்கின்முன்
எண்டென் றிவரிற் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுநுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏக: | ஒருவன் |
| அயம் | இந்த |
| விஷ்ணு | விஷ்ணுவானவன் |
| வ்யாப்த | வியாபித்திருக்கின்றான் |
| இதி | என்று |
| அவகம்ய | அறியப்படுகின்றான், |
| அந்ய: | இன்னொருவன் |
| விஷ்ணுவல்லப: | அந்த விஷ்ணுவுக்குப் பிரபு |
| இதி | என்று |
| த்ரிலோக்யாம் | மூன்றுலோகங்களிலும் |
| ப்ரதித | ப்ரசித்தியடைந்தவன்; |
| அநயோ: | இவ்விருவருள் |
| அதிக: | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |

| | |
|---|---|
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆம்ரயாமஃ | ஆம்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் வியாபித்திருக்கின்றானென்று அறியப்படுகின்றான், இன்னொருவ னந்த வியாபியாகவுள்ளவனுக்குப் பிரபுவாகவிருக்கின்றான்; இவ்விருவர்களுட்சிறந்தவனை இவனென்று அறிவுடைய பெரியவர்களாகிய நீங்கள் சொன்னால், நாங்களந்த மஹாபுருஷனைச்சரணமாகவடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் விஷ்ணு வியாபித்திருக்கின்றான் என்று கூறியது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு வியாபித்திருத்தலால்.

விஷ்ணுவென்னும் பெயர் அரிக்கு வியாபகத்தா லுண்டாயதேயாம். இதனை,—

"என்னுஞ்சரணையெதிர்நோக்கியிரங்கலென்னின்
மன்னுமுலகினுயிரொங்கும்வதிந்துளேன்மற்
றுன்னினுறைந்துவினைசெய்யவுஞற்றினேன்யான்
பொன்னின்றிலங்குமுலகெய்துதிபோதியென்றான்" என்று ஸ்ரீபாகவதத்தில் ஹரி தன்னை வியாபகனென்று உரைத்திருப்பதாகவிருக்கும் மேற்காட்டிய செய்யுளாலும்,

ஸர்வஹ்ருதி விஷ்ணு [illegible] என்று ஆத்மபோதோபநிஷத்திலுரைக்கப்படுதலாலும்,

"திடவிசும்பெரிவளிநீர்நிலமிவைமிசை
படர்பொருள்முழுவதுமாயவையவைதொறும்
உடன்மிசையுயிரெனக்கரந்தெங்கும்பரந்துளன்
சுடர்மிகுசுருதியுளிவையுண்டசுரனே" என்று நாலாயிரப்பிரபந்தத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவ னவ்விஷ்ணுவுக்குப் பிரபு என்றது - ஹரனே, அது அவ்வ ரன் ஹரிக்குப் பிரபுவாகவுள்ளவனென்று கேட்கப்படுதலால். இதனை,

[illegible]

என்றுபநிடதத்தும்,

“ விச்சுவன்சிறைப்புள்ளரசுயர்த்தவன்விளம்பும்
விச்சுவாதிகனெறுழ்வலிச்சினவிடையூர்தி
யெச்சமேசுரும்புளர்துழாயலங்கலானென்ப
வெச்சநாயகன்பொலந்துணரிதழிமாலிகையான்” என்று கா ஞ்சிப்புராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

**தாத்பரியம்.**

ஹரி வியாபகன், ஹரன் அவ்வியாபகனான ஹரிக்குப் பிரபு என்பதாம்.

**தாரதம்மியம்.**

வியாபகனாகவுள்ளவன் சிறந்தவன், அவனைவிட அவனுக்குப் பிரபுவாகவுள்ளவன் சிறந்தவன்; ஆதலால் நாங்கள் இவ்விஷயத்தில் தாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கிச் சிறந்த ஹரனைச் சரணமாக அடைந்து வணங்குகின்றோம்.—எ-று. (உஎ)

𑌏𑌕𑍋 𑌜𑌨𑌾𑌰𑍍𑌦𑌨 𑌇𑌤𑌿 𑌪𑍍𑌰𑌕𑌟𑍀𑌕𑍃𑌤𑍋𑌽𑌯
𑌮𑌸𑍍𑌯 𑌸𑍁𑌖𑌙𑍍𑌕𑌰 𑌇𑌤𑌿 𑌸𑍍𑌫𑍁𑌟𑌮𑍀𑌰𑍍𑌯𑌤𑍇 𑌹𑌿 ।
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾
𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁 𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃 ॥

ஏகோஜநார்த்தநஇதிப்ரகடீக்ருதோயமஸ்யஸுலங்கரஇதிஸ்புடமீர்யதேஹி । கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாம: ||

**மொழிபெயர்ப்பு.**

மலர்ப்பூஞ் சோலை வையத்து மன்னுஞ் சனார்த்த னனென்ன
வுலப்பார் பெயரை யார்ந்தொருவ னுற்ற னொருவ னுமையொருவன்
றலப்பா லுயிர்கட் கின்பமதைத் தருசங் கரனாத் தானிற்றன்
எலப்பா லாவார் யாரிவரு ளிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்போருள்.

| | |
|---|---|
| அயம் | இந்த |
| ஏகஃ | ஒருவன் |
| ஜநார்த்தநஃ | ஜனங்களைப் பீடிக்கிறவன் |
| இதி | என்று |
| ப்ரகடீக்ருத | தெரிவிக்கப்பட்டிருக்கின்றான், |
| அந்யஸ்து | இன்னொருவனோவென்றால் |
| சங்கரஃ | சுகத்தைப்பண்ணுகின்றவன் |
| இதி | என்று |
| ஸ்புடம் | நிச்சயமாக |
| ஈர்யதேஹி | சொல்லப்படுகின்றானல்லவா; |
| அநயோஃ | இவ்விருவருக்குள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்றோம். |

## போழிப்பு.

ஒருவன் ஜனார்த்தனனென்று தெரிவிக்கப்பட் டிருக்கின்றான், இன்னொருவன் சங்கரனென்று நிச்சயமாகச் சொல்லப்படுகிறான்; இவர்களுட் சிறந்தவனை இவனென்று பெரியவர்களாகிய நீங்கள் சொன்னால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகஅடைந்து வணங்குகின்றோம்.

## விதப்பு.

ஒருவனை ஜனார்த்தனனென்றது-ஹரியை, அது அவ்வரி ஜனா ர்த்தனனாக நின்றமையால். ஜனார்த்தனன் என்றால் ஜனங்களைப் பீடித்தவனென்று பொருள் ஆகும்.

ஹரி, ஜகத்பிரஸித்தனாகவிருந்த மாவலி மன்னனது யாகசாலைக் குட்புகுந்து மூவடிமண் கேட்க, அவனவ்வாறே கொடுக்க, அவனை வஞ்சிக்குமாறு பேருருவடைந்து ஈரடியாலே மூவுலகளந்து மற்றோ ரடிக்கவன் தலைமீது காலைவைத்து அவனைப் பாதலத்தி லிருக்குமாறு செய்து பின்னர் செருக்குந் தருக்கும் பொருந்தி யிவ்வுலகத்தினை யழிக்க நிமிர்ந்து நின்றனனென்றும், இரணியனைக் கொல்லுமாறு தூணினின்றும் வெளிப்பட்டு அவனைக் கொன்ற பின்னர் அவனுட விரத்தபானத்தால் வெறியுற்று உலகத்தை யழிக்க முயன்று நின்றன னென்றும், அப்பொழுது ஜனங்கள் கஷ்டத்தை யடைந்தார்களென் றும், சோமுகன் பொருட்டு மீனுருவடைந்தபொழுது, கடலைக் கொ ந்தளிக்கச்செய்து உபத்திரவித்தமையால், ஜனங்கள் வருந்தினார்களெ ன்றும், அமிர்தமதனத்தின்நிமித்தம் ஆமையுருவடைந்தபோது கடற் கரையைப் பேதித்து நின்றமையால், ஜனங்கள் வருந்தினார்களென் றும் கூறுமிவைகளால் ஜனார்த்தனனென்று ஹரிக்குப் பெயராகியது. இதனை—

"ஈரெயிற்றசுரர்கோமான்மாவலியென்போன்றன்னைக்
காரகப்படுத்திமற்றைக்கடிகமழலங்கற்குல்லைத்
தாரகப்படுத்தமாயோன்தன்னிகரின்மைநோக்கிப்
பேரகலண்டமெல்லாம்பிளப்பதற்குருத்துநின்றான்" என்று வ

ரும் ஸ்காந்தபுராணத்தும்,

"எண்ணில்கோடிசிரங்கள்கரங்களிலங்கவுலப்பிலதாங்
கண்ணிறைதீயுலகெங்கும்வளைந்திடமூச்சுமிழ்காலறைய
மண்ணொடுவிண்ணினைநுகரவிரித்திடுவாய்புகையாயெழவே
விண்ணவர்முனிவரலைந்துநடுங்கினர்மேவவுமிடமிலதாய்" என்

று பாகவதத்தும் வருதலானுணர்க.

ஒருவன் சங்கரனென்று பிரஸித்தியானவனென்றது - ஹரனே, அது அவ்வரன் அவ்வாறு ஜீவர்களுக்கு இன்பங் கொடுக்கின்றவனுத லால்.

சங்கரன் - சுகத்தைச்செய்பவன். ஹரியடைந்த அகம்பாவமுத லியவைகளாலும், ஆலாலவிஷமுதலியவைகளாலும் ஆன்மகோடிக ளுக்குண்டான துன்பங்களை ஹரனகற்றி இன்பத்தை யுண்டாக்கினு னென்று நூல்களில் விஸ்தாரமாகக் கேட்கப்படுகின்றன. இதனை—

ஶங்கரோ ஹ வா நாமைஷ ப்ராணஸுகஸ்வா ப்ரஜா: என்னும் பைப்பலாதசுருதியாலும்,

“ இன்பந்தருவன்குயிலேயேழுலகும்முழுதாளி
யன்பனமுதளித்தூறுமானந்தன்வான்வந்ததேவன்
நன்பொன்மணிச்சுவடொத்தநற்பரிமேல்வருவானைக்
கொம்பின்சுழற்றுங்குயிலேகோகழிநாதனைக்கூவாய்” என்னுந் தமிழ்வேதத்தாலும், இதர நூற்பிரமாணங்களாலும் உணர்க.

### தாத்பரியம்.

ஹரி ஜனங்களை வருத்தி ஜனுர்த்தனனுனன், ஹரன் ஜனங்க ளைச் சுகப்படுத்திச் சங்கரன் ஆனன் என்பதாம்.

### தாரதம்மியம்.

ஜனங்களைப் பீடிப்பவனைவிட ஜனங்களைச் சுகப்படுத்துபவன் சிறந்தவனுதலால், நாங்களும் சனங்களைப் பீடிக்கிற ஜனுர்த்தன நாம னை ஹரியை அப்பிரதானமாக வகற்றிச் சனங்களுக் கின்பத்தைக் கொடுக்கின்ற ஹரனைப் பிரதானமாகக்கருதி வணங்குகின்ருேம். ()

ஹத்ருத்வம் ஶிம்வ ஈநாஸ்யம் ஶ்ரு தவா நிமித்தம் ஹரோ ஹத்ரும்
க்ஷோபாத்கௌஶாகயிகஶ்ரீயாந்ருத்:।
கோவாந யோஸ்யிகஜந்த்ருந்ஷி ஞ்ருவர்ஜா
ஸூத்ரம் ப்ராவஞ்ச தத்வம் வாத்ஸாப்ர யாத:॥

பக்தம்பலிம்புநரதஃக்ருதவாநிஹைகோபக்தம்குபேரமகரோததிக ஸ்ரீயாந்யஃ । கோவாநயோரதிகஇத்ய நுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவ ந்துதமிமம்வயமாஶ்ரயாமஃ॥

## மொழிபெயர்ப்பு.

தன்றாள் வணங்கும் பலிதன்னைத் தரைக்கீ ழாரத் தாளூன்றி
நின்றா னொருவன் மற்றொருவன் நிகரி லடியை நேசித்த
குன்றா வியலான் றனைவசுவிற் குறையாக் குபேர னாக்கினான்
என்றா லிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஃபுநஃ | ஒருவனானால் |
| பக்தம் | பக்தனை |
| பலிம் | பலியை |
| இக | இந்த உலகத்தில் |
| அதஃக்ருதவாந் | கீழே போகச்செய்தான், |
| அந்யஃ | இன்னொருவன் |
| பக்தம் | பக்தனை |
| குபேரம் | குபேரனை |
| அதிகஃ | மிகுதியான |
| ஸ்ரீயாஃ | சம்பத்துடையவனாக |
| அகரோத் | செய்தான்; |
| அநயோஃ | இவ்விருவருக்குள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |

வயம் நாங்கள்
ஆஶ்ரயாமஃ ஆஶ்ரயிக்கின்றோம்.

## பொழிப்பு.

ஒருவன் அன்பனான மாவலியை இந்த உலகத்திற் கீழே போகச்செய்தான், இன்னொருவன் அன்பனான குபேரனை மிகுதியான சம்பத்துடையவனாகச் செய்தான்; இவ்விருவரிற் சிறந்தவனைப் பெரியவர்களான நீங்கள் உண்மையாகச் சொன்னால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகவடைந்து வணங்குகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் பக்தனான பலியைக் கீழேபோகச்செய்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு செய்தமையால்.

மாவலி ஹரியினிடத்து அன்புள்ளவன்; இவன் தனது குலப்பகைஞர்களாகிய தேவர்களிடத்திலன்றிப் பிறரிடத்தி லதிக பிரியமுடையவனாகவிருந்தவன். அவனொருகாலத்தி லொருயாகஞ்செய்ய வுத்தேசித்து யாகாரம்பஞ்செய்து யாகம் நடத்திக்கொண்டிருக்குங்காலத்துத் தேவர்களின் தூண்டுதலா லரி யொரு குள்ளப்பிராமணப் பிரமசாரியாய் அம்மாவலியின் யாகசாலையை யடைந்தனன். உடனே யாக தீக்ஷையுடனிருக்கும் பலிச்சக்கரவர்த்தி வந்த வந்தணனை யுபசரித்தனன். அப்பொழுது அந்தணனாகிய ஹரி நானின்னை வெகு நல்லவனென்று கேள்வியுற்று வந்தேன், வந்த எனக்குத் தவமியற்றவிருத்தற்கு மூன்றடிமண் வேண்டும்; நீ தருதியோவென, அன்னோன் அவ்வாறே தருகின்றேனென் றுரைத்துத் தாரைவார்த்தனன். தாரை நீரைக் கையிலேற்றவுடனே குள்ளனாக நின்ற ஹரி நீண்ட வுருவுடையனாகித் தனதிரண்டு காலடிகளால் மூவுலகங்களையும் அளந்து மூன்றாவதடி மண்ணெங்கென்றதற்கு, மாவலி அண்ணலே! மூன்றாவதடிக்கிடம் என்றலை என்றுரைத்து வணங்கினன். பின்ன ரம்மாயோ னவனை வருணபாசத்தாற் கட்டி வருத்தினான். இதனை யுணர்ந்துவந்து துதித்த பிரகலாதன்பொருட்டு அம்மாவலியை விட்டு இனி

நீ இங்கிராதே கீழுலகத்திலிரு என்று அவனைக் கீழ்நிலையில் இருக்குமாறு புரிந்தனன். இதனை—

“ உரவுநீருலகமெல்லாமோரடியாயதோங்கும்
இருவிசும்படியொன்றாயதேனையோரடிமற்றெங்ஙன்
தருதிநீதாராயென்னிற்சார்குவைநரகமென்னு
வருணபாசத்தால்வீக்கமாவலிகட்டுண்டானல்.
குருவைகுண்டதனாற்புன்கண்குறுகினன்போலுமென்னப்
பிரகலாதப்பேரன்பன்பெருமனைக்கண்டுநெஞ்சம்
உருகுறப்புளகமெய்தியுவப்பினேடேத்தாநிற்ப
மருவிரிதுளவமாலைமலரவன்வழுத்திச்சொல்வான்.
உன்பதநீரினாட்டியுற்றநீர்தலையிற்றாங்கி
மன்பெருஞ்செல்வமெல்லாம்வழங்குமாவலிதானென்றும்
இன்பமேபெறுதலல்லாலிடருறற்கியாவன்கொல்லோ
அன்பனென்றுரைத்துப்பாசமவ்வழிநீக்கினானல்.
வீக்கியவருணபாசம்விட்டொழிந்தவுணர்வேந்தன்
மாக்கண்வெம்முலையாள்செய்யமலர்மகள்கொழுநபச்சைத்
தேக்கமழ்துளவத்தாரோய்செப்புமோரடியென்சென்னி
மீக்கண்வைத்தளத்தியென்னவிமலனங்குவந்துவிள்ளும்” என்று பாகவதத்தும்,

“ மன்னிலங்குபாரதத்துத்தேரூர்ந்துமாவலியைப்
பொன்னிலங்குதிண்விலங்கில்வைத்துப்பொருகடல்சூழ்
தென்னிலங்கையீடழித்ததேவர்க்கிதுகாணீர்
என்னிலங்குசங்கோடெழில்தோற்றிருந்தேனே” என்று நாலாயிரப்பிரபந்தத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் பத்தனான குபேரனைச் சகலசம்பத்தும் உடையவனாகச் செய்தானென்றது - ஹரனை, அது அவ்வரன் அவ்வாறு தன் பத்தனான குபேரனுக்குச் சகல செல்வங்களையுங் கொடுத்தலால்.

விஶ்ரவஸ் மகரிஷியின் சந்ததியான வைச்ரவணன் என்னும் குபேரன் சிவதீக்ஷையுடன் சித்தவடமென்று வழங்குகின்ற சித்தவட

க்ஷேத்திரத்தில் ஹரனை வழிபட்டு அன்புபாராட்டிப் பூசித்தனன். அவனன்புக்கிரங்கிய ஹரன் அவனுக்கு வடதிசையின் ஆதிபத்தியமும், நவநிதி நாயகத்துவமும், யக்ஷாதிபதித்துவமும், நரவாகனமும், இன்னம் வேண்டிய ஆயுதவாகனாதிகளும் அளித்தனன். இதனை—

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] என்று

இவரகஸ்யகண்டத்தும்,

"சித்தவடச்சித்தேசுரர்பொற்சேவடியெண்ணிப்
பத்திபயக்கச்சென்றுகுபேரன்பணிதந்தான்
அத்தனையொக்குந்தோழமைகொண்டானருள்பெற்றான்
நத்தமுதற்கோமாநிதியெல்லாநனிபெற்றான்.

எண்ணிநினைந்தவரம்பலயாவையுமெய்துற்றான்
மண்ணியபுட்பகம்வாகனமாகவழங்குற்றான்
திண்ணியவெங்கதையாயுதமெய்துசிறப்புற்றான்
அண்ணனெடுங்குடையுத்தரதேயமளிக்கின்றான்" என்று கந்தபுராணத்தும் வருதலைக்கொண்டுணர்க.

### தாத்பரியம்.

ஹரி தன் பக்தனான பலியைக் கீழே தள்ளினான், ஹரன் தன் பக்தனான குபேரனை கௌரவப்படுத்தினான் என்பதாம்.

### தாரதம்மியம்.

'தன்னிடத்தி லன்புவைத்த வொருவனை எவ்வளவு தாழ்ந்த தன்மையி னிற்பவனும் வஞ்சித்துக் கீழ்ப்படுத்தமாட்டான். இது இவ்

வாறிருக்க, இவ்வரி தன்னை வழிவழி யடிமையாக வணங்கு மரபில் வந்தவனும் நீதிமானுமாகிய மாவலியைக் கீழ்ப்படுத்தியது எவ்வளவும் உசிதமான விஷயமல்ல. தன்னை வணங்கிய குபேரனுக்கு ஐசுவரியாதிகளை யளித்த ஹரன் மாவலி விஷயத்தி லிழிவுபுரிந்த ஹரியைவிட உயர்ந்தவனென்பது சொல்லாமலே யமைந்த விஷயம். ஆதலால் அன்பன் விஷயத்திற் கெடுதிபுரிந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி அன்பன்விஷயத்தி லுயர்வுபுரிந்த ஹரனைச் சிறந்தவனாக வறிந்து நாங்களந்த ஹரனையே சரணமாக அடைந்து வணங்குகின்றோம்.

> 𑌵𑍍𑌯𑌾𑌧𑌾𑌦𑌿𑌨𑍀𑌚𑌹𑍃𑌤𑌨𑍈𑌜𑌵𑌧𑍂𑌕𑌏𑌕𑍋
> 𑌵𑍍𑌯𑌾𑌧𑌾𑌯𑌿𑌤𑍋𑌽𑌪𑌿 𑌨𑌿𑌗𑌮𑌶𑍍𑌵𑌭𑌿𑌰𑌾𑌶𑍍𑌰𑌿𑌤𑍋𑌽𑌨𑍍𑌯𑌃।
> 𑌕𑍋 𑌵𑌾 𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌤𑍍
> 𑌸𑌤𑍍𑌯𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃॥

வ்யாதாதிநீசஹ்ருதநைஜவதூகஏகோவ்யாதாயிதோபிநிகமஶ்வபிராஶ்ரிதோந்ய:। கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாம:॥

## மொழிபெயர்ப்பு.

பண்டங் கிளிமென் மொழிமனைமார் பலரை வியாதப் பாதகர்கள்
கண்டங் கடையப் பெற்றவனாய் கண்டா னொருவன் கரையொருவன்
புண்டங்கிலவேவ்வேடுவனாய்ப்போந்துமறைநாயொடுபொலிந்தான்
எண்டங் கிவருட் சிறந்தவன்யா ரிசைத்தாற்பெரியீ ரிறைஞ்சுதுமே.

## பதப்பொருள்.

ஏக: — ஒருவன்

வியாதாதிநீசஹ்ருதநைஜவதூக — வேடர்முதலிய நீசசனங்களால் அபகரிக்கப்பட்ட தன்னதான மனைவியை யுடையவன்,

அந்ய: — இன்னொருவன்

வ்யாதாயிதோபி — வேடனானும்

நிகமஶ்வபி: — வேதங்களாகிய நாய்களாலே

| | |
|---|---|
| ஆச்ரித: | ஆச்ரயிக்கப்பட்டவன் ; |
| அநயோ | இவ்விருவருக்குள் |
| அதிக: | சிறந்தவன் |
| கோவா: | யாவன் ? |
| இதி | இதனை |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமி: | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் தன் மனைவியளை வேடர் முதலிய இழிஞர்களு மப கரிக்கு மியல்பினனாயினன், இன்னொருவன் தான் வேடனானலும் வேதங்களாகிய நாய்களாலே ஆச்ரயிக்கப்பட்டவனாகவிருக்கின்றான்; இவ்விருவரிற் சிறந்தவனைப் பெரியவர்களான நீங்கள் சத்தியமாகச் சொன்னால்,நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாகவடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் வேடர் முதலிய இழிஞர்களாலே அபகரித்த மனைவி யளை யுடையவனென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வண்ணம் வேடர்களா லபகரிக்கப்பட்ட மனைவியளை யுடையவனாதலால்.

ஹரி கண்ணனாகத்தோன்றி இறந்து பட்டபின்பு, அவன் மைத் துனனான பார்த்தன் அக்கண்ணன் மனைவியரிற் றீயில் விழுந்திறந்த வர்கள் தவிர வுள்ள மற்றையவர்களை அழைத்துக்கொண்டு அத்தின புரியைக் கருதிவருங்காலத்தி லிடையிலொரு விடத்திற் றங்கியிரு ந்த வொரு இராத்திரியில் அநேகம் வேடர்களான திருடர்கள் வந்து ஆளுக்கொருத்தியை யிழுத்துக்கொண்டு போய்விட்டார்கள். பின்

னர் அவ்வேடர்களுடன் போர்புரியத் திறமற்றவனுகப் பார்த்தனும் தன்னூரடைந்தனன். இதனை—

"ஈரொண்ணுயிரர்முதலேழைமார்களைச்
சீரிலாவேடுவர்சினத்திற்கைக்கொளப்
போரிஞன்மிகுந்தக்காண்டீவம்பூங்கணை
வீரமோடென்வலிவிசையங்கைக்கொடு" என்று ஸ்ரீ பாகவதத்தில் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவன் வேடனுனலும் வேதங்களாகிய நாய்களாற் சூழ்பெற்ருனென்றது-ஹரனை, அது அவ்வரன் அவ்வாறிருந்திருத்தலால்.

ஹரன் பாசுபதாத்திரத்தைக்கருதித் தன்னைக்குறித்துக் காமியார்த்த தவம்புரிந்த அருச்சுனனுக் கருள்புரியும்பொருட்டு வேடரூபமடைந்து சென்றபோழ்து, வேதங்களும் நாய்ரூபமடைந் துடன்வரச் சென்றனன். இதனை—

மடெதஷ-ம்டெதஷ-வஸவெ-ஷ-தவஷ்ஷ-ஹோதூவஸ-।
விநாகவாணிஹ-மவாநுவஸவ-வாவஹரொாஹாரு॥
கிராதம்வெஶஹோஸ்ாயகாஞநஉ-ஹஸநிஹ।
விஹஜஹோநாவிவ-வொமிஸிஜெ-ர-ஸிவாவரு॥ என்று ஸ்ரீமஹாபாரதத்தும்,

"மிக்கவன்றவஞ்சோதிப்பான்வேட்டுவக்கோலமாகித்
திக்கெலாமன்னங்கோலந்தொடருமோர்தேவதேவர்
மைக்குழலன்னம்பின்னேதொடரமற்ருெருகோலத்தைப்
புக்குறத்தொடர்வார்போலப்புகுந்தனர்பொருவில்லேந்தி" என்று குற்ருலபுராணத்தும்,

"அநந்தவேதமுமிறைவனேவலிஞன்ஞானிகளாயருகுசுசு
அநந்தகோடியிற்கோடிகணநாதர்வேட்டுவராயருகுபோத
வநந்தனுலினித்தரிக்கவரிதரிதிப்பூதலமென்றமரர்கூற
வநந்தமாமுகமாகியடிச்சுவடுநோக்கிஞனடவியெல்லாம்" என்று பாரதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

**தாத்பரியம்.**

ஹரியின் மனைவியானை வேடர் முதலிய இழிந்தவர்கள் இழுத்துக்கொண்டு போயினுர்கள், ஹரன் வேடவுருவடைந்தும் வேதங்களாகிய நாய்களாற் சூழப்பெற்றுன் என்பதாம்.

**தாரதம்மியம்.**

நல்ல ஜாதியர்களாற் கைக்கொள்ளப்பட்டாலும் ஒருவன் மனைவியைப் புகழுவோ ரிவ்வுலக முதலிய வெவ்விடங்களிலு மில்லை, அநேக மனைவியனை வேடர் முதலிய நீசஜன்மிகளால் அபகரிக்கப்படும் துர்ப்பாக்கியத்தினையுடையவனை இந்த உலகத்தில் எவன் சிறந்தவனுக வுள்ளவனென்று கூறுவான். இதனை யுத்தேசிக்குங்கால் வேடர்முதலிய நீசர்களா லபகரிக்கப்பட்ட மனைவியையுடைய ஹரி இவ்விஷயத்திற் பலராலும் இகழப்பட்டவனுகின்ருன்; வேடருபத்தை யடைந்தாலும், ஹரன் கௌரவஹானி யில்லாமலிருத்தலால், இவ்விஷயத்திற் சிறந்தவனுகின்ருன். ஆதலால் நாங்கள் மனைவியைப் பறிகொடுத் திழிவடைந்த ஹரியை அப்பிரதானமாக வொதுக்கிக் கிராதரூபத்திலும் மனைவியுடனும், வேதங்களான நாய்களுடனுமிருக்கும் ஹரனைச் சரணமாக வடைந்து வணங்குகின்ருேம்.—எ-று.

𑌏𑌕𑌸𑍍𑌯 𑌸𑍇𑌵𑌕𑌜𑌨𑌾𑌪𑍍𑌰𑌮𑍁𑌷𑌿𑌤𑌕𑌲𑌤𑍍𑌰𑌾
𑌅𑌨𑍍𑌯𑌸𑍍𑌯 𑌪𑍍𑌰𑌮𑍃𑌦𑍁𑌭𑍂𑌤𑌵𑌿𑌭𑍂𑌤𑌿𑌰𑍇𑌕𑌾।
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑍃𑌤𑍍𑌤𑌾𑌸𑍍
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁 𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃।

ஏகஸ்ய ஸேவகஜநாப்ருஸதக்தகாத்ரா அந்யஸ்யப்ரம்ருதுபூத விபூதிரேகா। கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்ப்ருவந்துதமிமம்வயமாஸ்ரயாமஃ॥

**மொழிபெயர்ப்பு.**

மணிநீர் வையத் தொருவனடி மருவிச் சேவை புரியடியர்
திணிதோள் முதல விடமெல்லாந் தீயாற் சுட்டுத் திரிதருவோர்
கணிசே ரொருவன் றிருவடியர் கனமா நீறு காணுதலோர்
எணிலா ரிவருட் சிறந்தவர்க ளிசைத்தாற் பெரியீ ரிறைஞ்சுதுமே.

### பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஸ்ய | ஒருவனுடைய |
| ஸேவகஜந: | அடிமைகள் |
| ப்ருஸூதக்தகாத்ர: | மிகவும் சுடப்பட்ட சரீரமுடையவர்கள், |
| அந்யஸ்ய | மற்றொருவனுடைய |
| ஸேவகஜநா: | அடிமைகள் |
| சுப்ரமிருதுவிபூதிரோகாபூத | வெண்மையாயும், மிர்துவாயும், பரிசுத்தமாயுமிருக்கிற விபூதிரோகையோடு கூடினவர்கள்; |
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஸ்ரயாம: | ஆஸ்ரயிக்கின்றோம். |

### பொழிப்பு.

ஒருவனுடைய பத்தசனங்கள் சுடப்பட்ட சரீரத்தினையுடையவர்கள், மற்றொருவனுடைய பத்தசனங்கள் மிகவும் வெண்மையான பஸ்மதாரிகளாகவுள்ளவர்கள்; இவ்விருவர்களுட் சிறந்தவனை இவனென்று பெரியவர்களான நீங்கள் கூறுவீர்களானல், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

### விதப்பு.

ஒருவனுடைய பக்தஜனங்கள் சுடப்பட்ட சரீரங்களையுடையவர்களென்றது-ஹரியை, அது அவ்வரி பக்தர்கள் அவ்வாறு சுட்டுக்கொள்ளுதலால். இதனை—

"சென்னியோங்குதண் திருவேங்கடமுடையாயுலகு
தன்னைவாழநின் றநம்பிதாமோதராசதிரா
என்னையுமென்னுடமையுநின்சக்கரப்பொறியொற்றிக்கொண்டு
நின்னருளேபுரிந்திருந்தேனினியென் திருக்குறிப்பே" என்னும்
நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க.

ஒருவனுடைய பத்தசனங்கள் வெண்மையும் மிருதுவுந் தூய்மையுமானதான விபூதியைத் தரிக்கப்பெற்றவர்களாக விருக்கின்றார்கள் என்றது-ஹரனை, அது அவ்வரபத்தர்கள் அவ்வாறு தரித்துக் கொள்ளுதலால். இதனை—

"எவரேனுந்தாமாகவிலாடத்திட்ட திருநீறுஞ்சாதனமுங் கண்டாலுள்கி, யுவராதேயவரவரைக்கண்டபோதேயுகந்தடிமைத்திறநினைந்தங்குவந்துநோக்கி, யிவர்தேவரவர்தேவரென்றுசொல்லியிரண்டாட்டாதொழிந்தீசன்றிறமேபேணிக், கவராதேதொழுமடியார்நெஞ்சினுள்ளேகன்றாப்பூர்நடுதறியைக்காணலாமே" என்று வருந் திரவிடசூக்தத்தாலுணர்க.

**தாத்பரியம்.**

ஹரிபத்தர் சுடப்பட்ட உடம்பினர்; சிவபத்தர் விபூதிதாரண சரீரிகள் என்பதாம்.

**தாரதம்மியம்.**

மிகவுஞ் சுடப்பட்ட சரீரத்தினையுடைய பக்தர்களை யுடையவனைக்காட்டிலும், மிகவும் பரிசுத்தமான விபூதியைத் தரித்த பக்தர்கள் கஷ்டமில்லாதவர்களாதலாலே சுடப்பட்ட தேகங்களை யுடையவர்களை பக்தர்களாகவுடையவனைவிட தூய்மையான விபூதிதாரிகளான பத்தர்களையுடையவன் சிறந்தவனாதலால், இவ்விஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக வகற்றிச் சிறந்த ஹரனை நாங்கள் வணங்குகின்றோம்.—எ-று. (௬௧)

ஸகொ நிதாஜஉஹவஅடிவத்ரூஸாயீ
ஹ்ரெந்ராஹிதாஉரூஸஉஹாவடிஉகுலவாஸீ।

𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯𑌵𑍃𑌦𑍍𑌧𑌾
𑌸𑍍𑌸𑌤𑍍𑌯𑌂𑌬𑍍𑌰𑍁𑌵𑌨𑍍𑌤𑍁𑌤𑌮𑌿𑌮𑌂𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃॥

ஏகோநிதாந்தமபவத்வடபத்ரசாயீஹ்யந்யோஹிதாத்ருஶமஹா
வடமூலவாஸீ। கோவாநயோரதிகஇத்யநுசிந்தியவ்ருத்தாஸ்ஸத்யம்
ருவந்துதமிமம்வயமாஶ்ரயாமஃ॥

## மொழிபெயர்ப்பு.

ரள மிப்பி யின்றிறைக்குந் தண்ணீ ருலகிற் சாரொருவன்
பிரள மொன்றி வடத்திலையில் வீழ்வா னுவான் வேறொருவன்
ரள மொன்று களத்தோடக் கல்லா னிழலின் கண்ணுறுவான்
ரள மொன்ற லெவரிடைநீர் சாற்றிற் பெரியீர் தாழுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏகஃ | ஒருவன் |
| நிதாந்தம் | எப்பொழுதும் |
| வடபத்ரசாயீ அபவத் | ஆலிலையிற்படுத்துக்கொள்ளுகிறவனுனன், |
| அந்யஃ | இன்னொருவன் |
| தாத்ருஶவடமூலவாஸீ | அப்படிப்பட்ட ஆலமரத்தினடியிலிருக்கிறவனுக |
| அபவத் | ஆனன்; |
| அநயோஃ | இவ்விருவருக்குள் |
| அதிகஃ | சிறந்தவன் |
| கோவா | யாவன்? |
| இதி | இதனை |
| அநுசிந்திய | ஆலோசித்து |
| வ்ருத்தாஃ | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம். |
| இமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாமஃ | ஆஶ்ரயிக்கின்றேம். |

## பொழிப்பு.

ஒருவன் சதா ஆலிலையிற் கிடைப்பவனுகவானுன், இன்னொருவன் அவ்வாலினடியிலிருப்பவனுகவானுன்; இவ்விருவருக்குள் பெரியவர்களே! யாவன் சிறந்தவன்? நீங்கள் உண்மையைச் சொல்லுங்கள். நாங்கள் உங்களாற் சொல்லப்பட்ட அந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைகின்றோம்.

## விதப்பு.

ஒருவன் எப்பொழுதும் ஆலிலையிற் கிடந்தானென்றது - ஹரியை, அது அவ்வரி அவ்வாறு கிடத்தலால். இதனை—

“ பாலகனென்றுபரிபவஞ்செய்யேல்பண்டொருநாள்
ஆலினிலைவளர்ந்தசிறுக்கனவனிவன்
மேலெழப்பாய்ந்துபிடித்துக்கொள்ளும்வெகுளுமேல்
மாலைமதியாதேமாமதீவிரைந்தோடிவா” என்னு நாலாயிரப்பிரபந்தத்தாலுணர்க.

ஒருவன் அவ்வாலின்கீழிருந்தானென்றது-ஹரனை, அது அவ்வரன் அவ்வாறிருத்தலால். இதனை—

“ ஓரானீழலொண்கழலிரண்டு - முப்பொழுதேத்திய நால்வர்க் கொளிநெறி-காட்டினை” என்று திருஞானசம்பந்தப்பெருமான் திருவாய்மலர்ந்த திரவிடவேதத்தாலும்,

[illegible]
[illegible]
[illegible]
[illegible]
[illegible] என்று உபநிஷத்துக் கூறுதலாலுணர்க.

## தாத்பரியம்.

ஹரி ஆலிலையிற் கிடந்தான், ஹரன் ஆனிழலி லிருந்தானென்பதாம்.

## தாரதம்மியம்.

ஒரு ஆலிலையிற் கிடந்து வீணே உறங்குபவனைக்காட்டிலும், ஆலினடியில் ஞானோபதேசியாக இருப்பவன் சிறந்தவன். இதனால் ஆலிலையிற் கிடந்த ஹரியைவிட ஆலினடியிலிருந்த ஹரன் சிறந்தவனாதலால், இவ்விஷயத்திற் றாழ்வடைந்த ஹரியை அப்பிரதானமாக அகற்றி இவ்விஷயத்திற் சிறந்த ஹரனைப் பிரதானமாக நியாயமுகத்தாலுணர்ந்து நாங்களந்த மஹானாகிய ஹரனைச் சரணமாகவடைந்து வாழ்கின்றோம்.—எ-று. (கஉ)

𑌏𑌕𑍋 𑌦𑌦𑍌 𑌸𑌿𑌤𑌮𑍃𑌦𑌂 𑌤𑌿𑌲𑌕𑌂 𑌲𑌲𑌾𑌟𑍇
𑌹𑍍𑌯𑌨𑍍𑌯𑍋 𑌦𑌦𑍌 𑌹𑌰𑌿𑌤𑌲𑌂 𑌤𑌿𑌲𑌕𑌂 𑌲𑌲𑌾𑌟𑍇।
𑌕𑍋𑌵𑌾𑌨𑌯𑍋𑌰𑌧𑌿𑌕 𑌇𑌤𑍍𑌯𑌨𑍁𑌚𑌿𑌨𑍍𑌤𑍍𑌯 𑌵𑍃𑌦𑍍𑌧𑌾𑌤𑍍
𑌸𑌤𑍍𑌯𑌂 𑌧𑍍𑌰𑍁𑌵𑌂 𑌤𑌮𑌿𑌮𑌂 𑌵𑌯𑌮𑌾𑌶𑍍𑌰𑌯𑌾𑌮𑌃।

ஏகோ ததௌ ஸிதம்ருதம் திலகம் லலாடே ஹ்யந்யோ ததௌ ஹரித வஹம் திலகம் லலாடே। கோவாநயோரதிக இத்யநுசிந்தியவ்ருத்தாஸ் ஸத்யம்த்ருவந்துதமிமம்வயமாஶ்ரயாம:॥

## மொழிபெயர்ப்பு.

கொண்டற் கச்சுக் கிரிமுலையார் கோதை யிடத்திற் கூடுருவன்
மண்டுற் றிடுமோர் நெற்றியினான் மற்று மொருவன் குற்றமிலா
தொண்டுற் றிடுமவ் வுதவகனை ஒருநற் றிலத மாவுடையான்
கண்டுற் றிவருட் சிறந்தவனைக் கரைந்தாற் பெரியீர் காணுதுமே.

## பதப்பொருள்.

| | |
|---|---|
| ஏக: | ஒருவன் |
| லலாடே | நெற்றியில் |
| ஸிதம்ருதம் | வெள்ளை மண்ணை |
| திலகம் | திலகமாக |
| ததௌ | தரித்தான், |
| அந்ய: | இன்னொருவன் |

| | |
|---|---|
| ஹுதவம் | அக்கினியை |
| லலாடே | நெற்றியில் |
| திலகம் | திலகமாக |
| தடுதௌ | தரித்தான்; |
| அநயோ: | இவ்விருவருக்குள் |
| அதிக: | சிறந்தவன் |
| கோவா | யாவன் ? |
| இதி | இதனை |
| அநுசிந்தியா | ஆலோசித்து |
| வ்ருத்தா: | பெரியவர்கள் |
| ஸத்யம் | உண்மையை |
| ப்ருவந்து | சொல்லலாம்; |
| தமிமம் | அந்த இவனை |
| வயம் | நாங்கள் |
| ஆஶ்ரயாம: | ஆஶ்ரயிக்கின்றோம். |

## பொழிப்பு.

ஒருவன் திலதமாக வெள்ளை மண்ணை நெற்றியிலணிந்தான், மற்றொருவன் திலதமாக அக்கினியை நெற்றியிலணிந்திருக்கின்றான் இவ்விருவருட் சிறந்தவனைப் பெரியவர்களே நீங்கள் கூறினால், நாங்களந்த மஹாபுருஷனைச் சரணமாக வடைந்து வாழ்கின்றோம்.

## விதப்பு.

ஒருவன் நெற்றியில் மண்ணைத்தரித்திருக்கின்றானென்றது-ஹரியை, அது அவ்வரி அவ்வாறு தரித்திருத்தலால். இதனை,—

"பூப்பிட்டானைப்புரந்தருளென்றுமுன்
கூப்பிட்டானைத்தன்குக்கியுட்கூவெலாம்
ஆப்பிட்டானையகிலகனந்தனைக்
காப்பிட்டானைக்காப்பிட்டனள்காரிகை" என்று பாத்மோத்தரத்தும்,

ஆவினீரதனால்மஞ்சனமாட்டியதினுறுமண்கொடுவிளக்கிச்
ாய்பன்னிரண்டுநாமமுஞ்சாத்திச்சதுமறையோதும்வேதியர்கள்
ாவின்மந்திரநீருடலெலாந்தெளித்துநவையில்கோதானமுநல்கிக்
ாவிகொள்விழியார்கருப்புரதீபங்காட்டினர்கவினுறப்பலகால்" எ
று பாகவதத்தும் வருதலைக்கொண்டுணர்க.

ஒருவனக்கினியைத் திலதமாக வுடையவனாக விருக்கின்றனெ
றது-ஹரனே, அது அவ்வரன் அவ்வாறு நெற்றியில் திலதம்போ
ற அக்கினிக்கண் உடையவனாக இருத்தலால். இதனை—

யொ லீ வெ வெ ய வ் த்ரு வ ா ஈ ஊ ா ஷ கா ஆ ஂ - கா ஂ வொ ஆ
ஹொ ரா ஹ்ரீ நெ த்ரு ஃ என்று பைப்பலாத சுருதியிலும்,

"சுற்றுமமரர்சுரபதிநின்றிருப்பாதமல்லால்
பற்றொன்றிலோமென்றழைப்பப்பரவையுணஞ்சையுண்டான்
செற்றங்கனங்கனைத்தீவிழித்தோன்றன்றில்லையம்பலவன்
நெற்றியிற்கண்கண்டகண்கொண்டுமற்றினிக்காண்பதென்னே"
ன்று திரவிடசுருதியிலும்,

"சந்தனக்களபந்துதைந்தநன்மேனித்தவளவெண்பொடிமுழுதா
ம், செந்தழலுருவிற்பொலிந்தநோக்குடையதிருநுதலவர்கிடம்போ
ம், இந்தனவிலங்கலெறிபுனந்தீப்பட்டெரிவதொத்தெழுநிலைமாட,
ந்தணரழலோம்பலைபுனற்களந்தையணிதிகழாதித்தேச்சரமே" என
திருவிசைப்பாவிலும் வருதலைக்கொண்டுணர்க.

**தாத்பரியம்.**

ஹரி நெற்றியில் மண்ணைத் தரித்தான், ஹரன் நெற்றியி லக்கி
க்கண்ணைத் தரித்தான் என்பதாம்.

**தாரதம்மியம்.**

ஒருவன் சாமான்யமாக வெல்லாராலும் தரிக்கத்தக்க வொரு
ஸ்துவைத் தரித்திருப்பானாயின் அவனை யாவரும் மதிப்பாகக்கொ
ளார்கள்; பிறராற் றரிக்கமுடியாத வஸ்துவை ஒருவன் தரித்திருப்

